# திருக்குறள்

## பயனில சொல்லாமை:

- பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
  எல்லாரும் எள்ளப் படும்.
- சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
  நீர்மை யுடையார் சொலின்.
- பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
  மக்கட் பதடி யெனல்.
- நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
  பயனில சொல்லாமை நன்று.
- சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
  சொல்லிற் பயனிலாச் சொல்.

## தீவினையச்சம் ★

- தீயவை தீய பயத்தலாற் தீயவை
  தீயினும் அஞ்சப் படும்.
- மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
  அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.
- இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
  இலனாகும் மற்றும் பெயர்த்து.
- தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
  வீயா தடியுறைந் தற்று.

## ஒப்புரவறிதல் ★

- ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
  செத்தாருள் வைக்கப் படும்.
- ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்
  பேரறி வாளன் திரு.
- பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
  நயனுடை யான்கட் படின்.

## ஈகை: ★

- வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்
  குறியெதிர்ப்பை நீர துடைத்து.
- இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
  இன்முகங் காணு மளவு.
- ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
  மாற்றுவா ராற்றலிற் பின்.
- ஈந்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
  வைத்திழக்கும் வன்க ணவர்.
- சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
  ஈதல் இயையாக் கடை.

## புகழ் ★

- ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
  ஊதியம் இல்லை உயிர்க்கு.

## புகழ்

- நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
  வித்தகர்க் கல்லால் அரிது.
- தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
  தோன்றலிற் றோன்றாமை நன்று.
- புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
  இகழ்வாரை நோவ தெவன்.
- வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
  வாழ்வாரே வாழா தவர்.

## அருளுடைமை: ★ துறவறவியல்

- அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
  பூரியார் கண்ணும் உள.
- அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
  இன்னா உலகம் புகல்.
- அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
  கிவ்வுலக மில்லாகி யாங்கு.
- வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
  மெலியார்மேற் செல்லு மிடத்து.

## புலான் மறுத்தல்: ★

- தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
  எங்ஙனம் ஆளும் அருள்.
- அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
  உயிர்செகுத் துண்ணாமை நன்று.
- கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
  எல்லா உயிருந் தொழும்.

## தவம்: ★

- வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
  ஈண்டு முயலப் படும்.
- சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
  சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

## கூடாவொழுக்கம்: ★

- வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
  ஐந்தும் அகத்தே நகும்.
- நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
  வாழ்வாரின் வன்கணார் இல்.
- மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி
  மறைந்தொழுகு மாந்தர் பலர்.
- மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
  பழித்த தொழித்து விடின்.
- வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
  புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.